# தஞ்சைப் பெருவுடையார் கோயில்

# க ல் வெ ட் டு

# அருஞ்சொற்பொருட்குறிப்பு




**மின்னாக்கம்**

**மெய்யரசு**

அக்கம் = அஃகம், தானியம்

அக்கன் = தமக்கை

அக்ரம் = நுனி

அங்கிதேவர் ஆலையம் = அக்கினிக் கடவுள் வீற்றிருக்கும் சிறு கோயில்

அஞ்சடுத்து = ஐந்து வரிசைப்படுத்தி

அடுத்த முறை = அடுத்த வாரிசு

அடுத்து விளக்கின = வரிசைப்படுத்தின

அடைகுடிகள் = பெறுகின்ற குடிமக்கள்

அட்டித் திருவடித்தொழுத = வைத்து திருவடியில் வணங்கிய

அம்பட்டன் = நாவிதன்

அம்புமுதுங்கறடு = கறநடு முரடான-சித்தரத்தை போன்ற முத்து

அரக்கு = (அகத்துள் செறித்துள்ள) அரக்கு

அரசி மாணிக்கம் = இராணிச் சிவப்பு

அர்த்த சம்பத்து = பொருளுடைமை

அல்லாது விடில் = அற்றவர்கள் ஆனால்

அறுத்தருளி = கெட்டழியச் செய்து

அனாதேசம் = கண் காணாத இடம்

அனுவட்டம் = நீண்டுருண்ட முத்து

ஆகா விசாதி = ஒரு வகை மணி

ஆடவல்லான் = நடனமூர்த்தி, இப்பெயரால் உள்ள ஒரு நிறை கல்

ஆடு சார்த்தி = ஆட்டைக் குறித்து

ஆட்டை வட்டம் = ஆண்டு ஒன்றுக்கு வட்டி

ஆட்டை வட்டன் = முழு ஆண்டு தொறும்

ஆதி பூமி = வேள்விச் சாலை

ஆரியம் பாடுவார் = சமஸ்கிருதப் பாடல் பாடுவோர்

ஆலவிருக்ஷம் = ஆலமரம்

ஆளிட்டு = மாற்றான் விட்டுப் பணியாற்றி

ஆனை ஆட்கள் தெரு = யானைப் பணியாளர் தெரு

ஆனைகடுவார் தெரு = யானைக்குச் சோறு சமைப்பார் தெரு

ஆஸநம் = பீடம்

இடத்திருவடி நிலை = இடது பாதக்குறடு

இரட்டபாடி ஏழரை இலக்கம் = இராட்டிரகூடர் ஆண்ட நாடு. பம்பாய் மாநிலத்தின் தென்பகுதியும், ஹைதராபாத் சமஸ்த்தானத்தின் மேல் பகுதியும் அடங்கிய, இந்நாடு ஏழரை லட்சம் பூமி (வேலி, ஏக்கர் போன்ற நில அளவு முற்காலத்தில் "பூமி" என வழங்கிற்று) யை உடையது

இரட்டை = இணைந்த

இரண்டாந்தரம் = இரண்டாவது முறை

இருமடி சோழன் = இரண்டு முடி, இரண்டு குடை போன்று இரு மன்னர்க்கும் உரிய இருச்சின்ன மரியாதைக்குரிய சோழன் (பாண்டிய நாட்டை வென்று கொண்டதால்)

இலாடமாதேவியார் = இலாட தேச மன்னன் மகள்

இலைகனி = இலைக்கருக்கு

இலைச் செப்பு = வெற்றிலை வைக்கும் பாத்திரம்

இலைத்தட்டு = இலை போன்று அமைந்த தாம்பாளம்

இறை கட்டின நிலம் = மன்னன் வரி நிர்ணயிக்கப்பட்ட விளை நிலம்

இறைஇலி நிலம் = மன்னர்க்குச் செலுத்த வேண்டிய வரியிலிருந்து விலக்குப் பெற்ற விளை நிலம்

ஈசாநமூர்த்தி = வடகிழக்கு மூலைக்குரிய ஈசானன் என்னும் திக்குப்பாலகர்

ஈச்சொப்பிக்கை = கை போன்ற, உருவமுள்ள ஈ ஓட்டி

ஈழ மண்டலம் = இலங்கை

ஈழச்சேரி = ஈழவர் சேர்ந்து வாழும் குடியிருப்பு

உசரம் = உயரம்

உடன் பிறந்தான் = சகோதரன்

உடுக்கை வாசிப்பான் = துடிப்பறை என்னும் தோற்கருவி வாசிக்கிறவன்

உடைச்சு = கோயிற் பூசை

உடையார் = கிழார், உரிமையாளர்

உத்தரம் = இரு சுவர் அல்லது இரு தூணின் மேல் குறுக்காகப் பொருத்தும் உறுப்பு

உத்துங்கதுங்கன் = ராஜராஜனின் பட்டப் பெயர்

உபபீடத்துக் கண்டப்படை = அடித்தளக் கட்டுமானத்தின் கண்டவரி,

உமா பரமேச்வரியார் = உமையம்மை

உலகளந்தான் = ராஜராஜன் பெயர்களுள் ஒன்று

உள்பட = உள்ளடங்க

உள்படும் = இசையும், உள்ளடங்கும்

உள்ளரக்கு = உள்ளே செறித்த அரக்கு

உள்ளாலை = மதிலுக்குட்பட்ட பகுதி

உள்ளிட்டன = உள்ளடங்கியவை

உள்ளூர்ப் பண்டாரம் = உள்ளூரில் உள்ள களஞ்சியம்

ஊடறுத்துப்போன வாய்க்கால்கள் = உர், வயல் முதலியவற்றின் இடையே செல்லும்

வாய்க்கால்கள்

ஊத்தை அட்டாமல் = கேடு வராமல்

ஊரிருக்கை = மக்கள் வாழிடம்

ஊருணி குளம் = மக்கள் அருந்தும் நீர்நிலை

ஊர் நத்தம் = குடியிருப்புக்குரிய மேட்டுப் பாங்கான நிலம்

ஊழி = உலகம் விளங்கும் காலம்

எடுப்பிச்ச = கட்டின

எழுந்தருளி நின்ற = எழுந்து நிற்கிற

எழுந்தருளிவித்த = கோயிலில் வீற்றிருக்கச் செய்த

எறிந்து = பொருதி வென்று

ஏற்றின = குடியேறச் செய்த

ஒட்டு வட்டில் = இலேசான வட்டமான, குழிந்த, ஒரு பாத்திரம்

ஒப்பன் திருக்கைக்காறை = அப்பன் கை அங்கி (அஸ்தம்)

ஒப்பு முத்து = தரமான முத்து

ஒரு சிறு நாடு

ஓரணை = இணை அல்லது ஒரு ஜோடி (இரண்டு)

ஓராட்டை = ஓர் ஆண்டு

கங்கில் = இடைத் தாங்கு கழி

கங்கைபாடி = இன்றைய மைசூர் மாநிலத்தின் தென் பகுதியான கங்கர் குல

மன்னர்கள் ஆண்ட நாடு

கச்சொளம் = ஏதோ ஒருவகைப் பாத்திரம்

கடமைக்குச் செலவு பெற = பணிக்கு ஆகுங் செலவு தொகை பெற்றுக் கொள்ள

கடவார் = உரிமையுடையவர்

கணக்கு = கணக்கெழுதுவோன்

கணக்கெழுதுவான் = அன்றாடம் கணக்குப் பதிவு செய்யும் கடமையாள்

கணபதியார் = சகல கணங்களுக்கும் தலைவரான விநாயகர்

கணிமுற்றூட்டு = நூலறிஞன், ஓவியன், சோதிடன் முதலியோர்க்குக் கொடுத்த

சர்வமானிய உடைமை நிலம்

கண்காணித் தட்டான்மை = பல தட்டார்களை வைத்து வேலை வாங்கும் தொழில்

கண்டநாண் = அட்டிகை போன்ற கழுத்தணி

கபாலம் = மண்டை ஓடு

கபோதம் = கபோதவறி

கம்மாணசேரி = கம்மாளர் சேர்ந்து வாழிடம்

கரணத்தார் = கணக்கர் குழு

கர்ண பிராவிருதர்கள் = தலையில் போர்த்தும் சிறிய துணியால் இரு காதுகளையும்

மூடிக்கொண்டு காட்சியளிக்கும் குள்ளமான மனிதர்கள்

கர்ணி = உரிமை, காணியாட்சி

கலசப்பானை = மூக்குள்ள கெண்டி

கலசம் = ஸ்தூபி அல்லது செம்பு

கலம் = படைக்கலம்

கலிங்கம் = தற்பொழுது ஒரிசா என வழங்கும் மாநிலம்

கவித்த = வளைந்து உள்ளடக்கிய

கழஞ்சு = பழங்காலத்து எடைக்கல், சுமார் 1/6 அவுன்ஸ், அல்லது 5/12 தோலா, அல்லது 1 1/3 வராகனெடை உள்ளது

கழனிக்குளம் = வயலுக்குப் பாசனமாகும் ஏரி

களம் = பயிரடிக்கும் களம்

கள்ளிப்பூ = கள்ளிப் பூப்போன்ற அணி உறுப்பு

கறண்டிகைச் செப்பு = மூடியும் சங்கிலியிற் பொருந்திய சுரண்டுகோலும் கொண்ட சுண்ணாம்புக் கரண்டகம்

கற்றிடை = செங்கல் சுடுமிடம், கல்லெடுக்கும் வன்பார்

கற்றளி = கற்கோயில்

கன்னான் = பித்தளை முதலிய உலோகபாத்திரம் செய்வோன்

காந்தர்வத் தெரு = இசைவல்லார்த் தெரு

காந்தர்வர் = இசைப்புலவர்

காந்தளூர்ச்சாலை = கேரளத்துக் காந்தளூரில் இருந்த, படைக்கலங்கள் நிரம்பியதும், படைப் பயிற்சி முதலான பல்துறைப் பழிற்சி அளிக்கும் இராணுவக் கல்விச்சாலை

காரணிக்கடன் = நில உரிமைக் கடமை அல்லது கட்டணம்

கால்மாட்டில் = கால்நடைச் செல்வத்தில்

கால்மாற்று = பத்தரை மாற்றுத் தங்கத்தரத்தில் 1/42 தரக்கூறு

காவிதிமை செய்ய = காவிக்கல்கல்லி எடுக்க

காளங்கள் = எக்காளம் என்னும் திருச்சின்னங்கள்

காளம் = எக்காளம்

காளாஞ்சி = தேங்காய் பழம் வைக்கும் பாத்திரம் அல்லது அர்க்கியவட்டை என்னும் பாத்திரம்

கானபாடி = இசைப்பாடல் பாடுவோர்

கிங்கிணிபெரும் நாண் = இடையில் அணியும் கிண்கிணிச் சரடு

கிடாரம் = வாய் அகன்று அடி குறுகிய பாத்திரம்

கிம்பிரி முகம் = மகரவாய்

கிழக்கடைய = கீழ்த்திசையில் அடுக்கிக் கட்டிய

கின்னரர் = முப்பத்து முத்தேவர்களில் இருவரான இவர் பாதி பறவையும், பாதி மானிடமுமாக விளங்குவர். கின்னர மிதுனம் எனப்படுவர்

கீழ்க் கணக்கு = உதவிக் கணக்கர்

கீழ்ப்புறன் = கிழக்குப் பகுதி

குடமலை நாடு = குடகு என் வழங்கும் தாடு

குடம் = நீர் கொள்ளும் குடம்

குடுத்த = கொடுத்த (குடு 'என்ற சொல்லே கல்வெட்டுக்களில் பரக்கக் காணப்படுகிறது)

குடுத்தார் குடுத்த கால் மாட்டில் = கொடையாளர் கொடுத்த கால் நடைச் செல்வத்தில்

குணவியது = தன்மையுடையது

குப்பி = குச்சல் சிவப்பு

கும்பத் தகடு = மத்தகத்தில் அணியும் தகடு

குரவன் = ஆசாரியன்

குருவிந்தம் = மட்டமான சிவப்பு மணி

குழல் = ஊதும் வாத்தியம்

குளங்கள் = நீர் நிலைகள்

குளூர்ந்த நீர் = படிகம் போன்ற நிறம்

குறங்கறுத்து = இடையில் துண்டித்து

குறுமடல் = சிறிய விபூதி மடல்

குறுமுத்து = சிறுமுத்து

குறை போந்து = முற்றுப் பெறாமல்

குன்றி = குன்றி மணி, கால் வீசம் வராகனெடை

கூற்றம் = நாடு, வட்டம் (தாலுகா போன்ற உட்பிரிவு)

கெண்டி = செம்பு

கேசாந்தம் = திருமுடிவரை

கைதவகை = தாழை முதலியன

கைத்தழை = கைவிசிறி

கைய்வட்டகை = கை பிடியுள்ள வட்டிகை

கொட்டகாரம் = பொக்கிஷம் அல்லது களஞ்சியம்

கொட்டி மத்தளம் வாசிப்பான் = கொடு கொட்டி அல்லது சித்த மத்தளம் என்னும்

கொண்ட = கைப் பற்றிய

கொம்பிற் கொள்கை = யானைத் தந்தத்தின் பூண் அல்லது கட்டியத் தடி

கொலினமை செய்வார் = இட்டபணி செய்பவர்

கொல்லம் = திருவாங்கூர் மேற்குக் கரையில் உள்ள பட்டினத்தைத் தலைநகராகக்

கொண்ட ஒரு சிறு நாடு

கொள்கை தேவர் = பலி கொள்ளும் மூர்த்தி அல்லது குறிப்பிட்ட ஒர் ஆயுதம்

கோமளம் = கோமேதகம்

கோமேதகம் = கிச்சிலி வண்ணமுடைய இரத்தினம்

க்ஷேத்ரபாலதேவர் = வடுகன் என்னும் வைரவன், ஊர்க் காவலன் எனவும்

பெயருண்டு

சகடை கொட்டி = முரசு கொட்டுவோன் அல்லது கஞ்சத் தாளம் கொட்டுவோன்

சக்கத்து = ஒரு வகை முத்து

சட்டம் = செப்புக் கம்பிப் பட்டை

சட்டுவம் = சட்டி

சண்டேசுவரர் = சண்டிகளின் தலைவர் (சண்டி = அறங்காப்பான்)

சண்டேச்வரப் பிரசாத தேவர் = அறுபத்து நான்குமூர்த்திகளுள் சண்ஈச அனுக்ரக மூர்த்தி

சந்திராதித்தவத் = சந்திர சூரியர் உள்ளவரை

சப்பத்தி = தட்டையான முத்து

சரடு = பூர்கயிறு

சன்னாலியள் = கோலப்பொடி தயாரிப்பவன், விபூதி தயாரிப்பவன், அல்லது சுண்ணாம்பு நீற்று வடிகட்டித் தருபவன்

சார்த்தி அருள = அணிவிக்க

சாலாபோகம் = அறச்சாலைகளுக்குரிய நிலம்

சாலியத்தெரு = நெசவாளர் தெரு

சிரோவர்த்தனை = தலைச்செல்வம் அதாவது ஜடாபாரம்

சிவந்த நீர் = செம்மை நிறம்

சிவபாத சேகரன் = இராஜராஜனின் பல்பெயருள் ஒன்று

சிறகு = பக்கம்

சிறுதநம் = சிறுவாட்டுப் பணம் அல்லது கணக்கில் வராத சில்லறை வரவுப் பணம்

சிறுதனம் = சொந்தப் பொருள்

சிற்றப்பன் = தந்தையின் தம்பி

சின்னங்கள் = அடையாளங்கள்

சுகந்தி = இளநீலப் பசுமையான ஒரு வகைப் பச்சை

சுடர் = திருவாசியின் விளிம்பில் உள்ள சுடர்

சுரபி = பசு (கறவைப் பசு)

சுருக்கந தகடு = பொதிந்த தகடு

சூலம் = மூவிலை நெடுவேல் (திரிசூல ஆயுதம்)

செத்தார் = இறந்தவர்

செப்பாணி = செம்பால் ஆன ஆணி

செப்புக் குடம் = செம்பால் செய்த ஸ்தூபியாகிய குடம்

செப்புத் திருமேனி = செப்புப் படிமம், செம்பால் வடித்த மூர்த்தி

சொனகச் சிடுக்கின் கூடு = யவன நாட்டு மரபில் செய்த பின்னர் கூடு போன்ற ஒரு அணி

சோமாஸ்கந்தர் (விடங்கர் = உளியால் பொளியப் பெறா மூர்த்தி

தகஷிணமேருவிடங்கள் என்னுங்காசுகல் = பொன் முதலிய, நிறுக்கும் மற்றொரு தரக் கல்லின் பெயர்

தக்ஷிணமேருவிடங்கர் = தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள உலோகத்தாற் படைத்த

தக்ஷிணா மூர்த்திகள் = ஆலமர் சுடவுள் தெற்கு பார்த்து, சின் முத்திரையுடன் குருமூர்த்தமாக அமர்ந்திருக்கும் சிவன்

தச்சாசார்யம் = மரவேலைத் தலைமை ஆசாரியன் அல்லது தலைமைச் சிற்பி

தச்சு = மரவேலை செய்யும் தொழிலினர், அல்லது கல்வேலை செய்பவர்

தடவிக் கட்டின = பொதிந்து இறுக்கிய

தடிகைபாடி = தற்காலத்து மைசூர் மாநிலத்தில் மைசூர் மாவட்டத்தைக் கொண்ட

தடிமாறும் = கழைக்கூத்தாடும் அல்லது குறை தவிர்க்கு!

தட்டம் = தாம்பாளம்

தண்டவாணி = பொன் மாற்றுக் கண்டறிய உதவும் உலை ஆணி

தண்டு = படையெடுப்பு

தண்ணிய = குறைந்த

தமருகம் = உடுக்கை அல்லது துடி

தமிழ்ப் பாட = தமிழ்ப் பாடல் பாடுதற்கு

தய்யான் = தையற்காரன்

தலைமாறு = மாற்றான்

தலைவாய்ச்சேரி = ஊர்த்தொடக்கத்தில் உள்ள புறவச்சேரி

தவளச்சத்ரம் மகுடம் = வெண்குடைக் கிரீடம்

தளிகை = நைவேத்திய பாத்திரங்கள்

தளிச்சேரி = கோயிற்சேரி

தளிச்சேரிப் பெண்டுகள் = கோயிலைச் சேர்ந்த பினு பிள்ளைகள், ஆடல் மகளிர்

தன்னேற்றம் = தன் சார்பினர்

தாந்தாம் = அவரவர்

தாமரைச் செயல் திருப்பொற்பூ = பொன்னால் செய்த தாமரைப்பூ

தாமரைத்தாள் வட்டில் = பல துளைகளைக் கொண்ட, தாராபிடேகத்திற்கேற்ற, குழிந்த வட்டில்

தானைத் திருப்பட்டிகை = இடுப்பில் அணியும் மணிப்பட்டி

திரு = கிரக நிலை கணிப்போன்

திருஆபரணங்கள் = நல்லணிகள்

திருநந்தவனங்கள் = திருக்கோயிலுக்கு மலரும் தளிரும் விளைகின்ற தோட்டங்கள்

திருநயநம் = கண் மலர்

திருநாமம் = பெரும்பெயர்

திருப்பட்டம் = நெற்றிப் பட்டம்

திருப்பட்டிகை = அரைப்பட்டம்

திருப்பதியம் = மூவர் முதலிகளான சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிய 'தேவாரம்' என வழங்கும் ஏழு திருமுறைகள்

திருப்பரிகலங்கள் = மேலான பாத்திரங்கள்

திருப்பரிசாரகம் = மடைப்பள்ளித் தொழில்

திருப்பள்ளிச் தொங்கல் மகுடங்கள் = கிண்கிணி ஆரம் போன்ற தொங்கல்களுடன் கூடிய கிரீடங்கள்

திருப்பள்ளித் தொங்கல் = மகர தோரணம் முதலான எடுபிடிகள்

திருப்புறக்குடை = முதுகுப்பக்க அங்கி

திருப்பொற்பூ = பொன்மலர்

திருமகள் = செல்வத்தின் அதிதேவதையான இலக்குமி

திருமஞ்சநசாலை = குளியற்கூடம்

திருமஞ்சநம் = குளித்தல்

திருமஞ்சனக்குளம் = திருக்கோயில் மூர்த்திகளின் அபிஷேகத்திற்கு நீரெடுக்கும்

நீர்நிலை

திருமஞ்சனத்தார் வேளத்து பெண்டாட்டி = திருமஞ்சனப் பணிபுரியும் மகளிர்

திருமடைப்பள்ளிக் குசவர் = மடைப்பள்ளிக்கு வேண்டும் பானை சட்டி

வனைந்தளிக்கும் குசவர்

திருமந்திரவோலை = அரசனின் அவைக்களத்து அதிகாரி

திருமாலை = பொற்பூமாலை

திருமுடி = கிரீடம்

திருமுற்றங்கள் = சந்நிதிகள்

திருமெய்காப்பார் = இறைவன் திருவுருக்காவல் புரிவார்

திருமெய்காப்பு = மெய்காவல் பணி செய்வான்

திருமேனி = மூர்த்தி, படிவம்

திருவடிக்காறை = பாத அங்கி பாதம்

திருவாய்க்கேழ்வி = மன்னன் வாய்மொழியைக் கேட்டு ஆணை எழுதுவோன்

திருவாய்மொழிஞ்ச = வாய்மொழி ஆணையிட்ட

திருவாய்மொழிந்தருளின = வாய்மொழிக் கட்டளையிட்ட

தீண்டாச்சேரி = தீண்டப்படாதார் சேர்ந்து வாழிடம்

துடங்கு = தொடங்கி

துடர் = சங்கிலி வளையம்

துணையன் = உதவியாளன்

தூக்கம் = தொங்கட்டான்

தேசு = ஒளி, பெருமை

தேவதானமாய் வருகின்ற நிலம் = தேவாலயங்கட்கு அறக் கொடையாய்க்

கிடைக்கின்ற நிலம்

தைச்ச = பொருத்திய

தைப்பு = பதித்தல்

தைய்த்த = பதித்த

தொட்கு = கட்டப்பட்டிருக்கும் நீர்த்தொட்டி

தொழுதக = வணங்கத்தக்கதாக

தோரை = நான்கு விரலிடையுடைய நீட்டல் அளவை

தோலிடந்தன = தோல் உரிந்தன

தோல் தேய்ந்தன = மேற்பூச்சு மழுங்கிய

நக்கன் = சிவபிரான், ஆடல் மகளிர் கோயிற்பணிபுரிவார் தம்மை நக்கன் அடியாள் என்பது மரபு, எனவே தம் பெயருக்கு முன் நக்கன் பெயரைச் சேர்த்துக் கொள்வர்

நடுவுரத்நப்பட்டிகை = மத்தியில் சிவப்புப் பதக்கம்

நட்டவஞ்செய்ய = நடனப் பயிற்சி அளிக்க

நம்பிராட்டியார் = நமது தெய்வப் பெருமாட்டியார், ஈச்வரியார்

நவரத்ந மோதிரம் = சிவப்பு, முத்து, பவளம், வயிரம், நீலம், புஷ்பராகம், கோமேதகம், வைடூரியம், ஆகிய ஒன்பது மணிகள் பதித்த மோதிரம்

நன் மருமகன் = நல்ல மாப்பிள்ளை

நாண் = சரடு

நாவிசஞ்செய்ய = மயிர் வினை புரிய

நாளதினாலே = மேலே கேறிப்பிட்ட நாளில்

நிசதம் = நாள்தோறும்

நிம்பொளம் = களங்கமற்றது, இளம் பசுமஞ்சள் நிறம் உள்ளது

நியாயங்கள் = முறையார்

நியாயத்தார் = மன்றத்தார்

நிலத்தாறு = நிலத்தின் வழி

நிலன் = விளை நிலம்

நிலையாய் தீக்ஷித்தார் = தீட்சை பெற்றுள்ள நிரத்தரப் பணியாளர்

நிவத்தம் = அறக்கட்டளை

நிவந்தக்காறர் = அறக்கட்டளை வழி ஊதியம் அல்லது சம்பளம் பெறுவோர்

நிறை = எடை

நீக்கி = விடுத்து

நீர்கோத்துப் பள்ளவாயாகிக் கடந்த நிலம் = நீர் நிரம்பி பள்ளமாகத் தரிசு கிடந்த விளைநிலம்

நீர்த்தெளியான் = தண்ணீர்த் தெளிப்பவன்

நீலம் = நீல ரத்தம்

நுளம்பபாடி = இன்றைய மைசூர் மாநிலத்தின் ஒரு பகுதியான நுளம்பர்கள் ஆண்ட ஒரு சிறு நாடு

நெடுமடல் = பெரிய விபூதி மடல்

பங்கு செய்த = கூறிட்ட

பங்கு வழி = பாகமுறை

பசான் = கதிர் அறுக்கும் பருவம்

பசுச்சார்த்தி = பசுவைக் குறித்து

பஞ்சதேஹ மூர்த்திகள் = ஐந்துடல் பெருமான்

படி செலவு பெற = வெளியூர் சென்றால் படி செலவுக்குப் பெற்றுக் கொள்ள

படிக்கம் = எச்சிற் படிக்கம்

படுகண் = படுகண்ணி என்னும் மாட்டும் வளையம் (காஞ்சிக் கொக்கி)

பணி செய்ய = கடமைபுரிய

பண்டாரங்கள் = பொக்கிஷம் அல்லது கருவூலங்கள்

பண்டாரத்துக் கூடி முதலான = பொக்கிஷத்தில் சேர்த்து மூலப் பொருளாக ஆகிவிட்ட

பண்டாரி = கருவூலப் பொறுப்பாளி, பொக்கிஷதார்

பதக்கம் = மார்பில் தொங்கும் வட்டவடிவான அணி

பத்மம் = மேல் நோக்கும் இதழ்களுடன் கூடிய தாமரை மலர்

பத்மாஸன = தாமரை மலர் போன்ற அகத் தோற்றமுள்ள

பந்தம் = கட்டு, பிணைப்பு

பந்துசம்பத்து = இன உடைமை

பயிட்டம் = ஒரு வகை முத்து

பரமஸ்வாமி = மகாதேவர்

பரிவாராலயம் = சுற்றுத் தேவதைகளின் சிறு கோயில்கள்

பர்வத சிகரம் = மலை முடி

பர்வதம் = மலை

பல குழிவு = பல பள்ளங்கள்

பலம் = வீசையின் நிறை

பவழகடகம் = பவழத்தால் ஆன கைக்கட்டு

பவழம் = பவளம்

பழமுத்து = பழைய அல்லது முதிர்ந்த முத்து

பளிக்கு வயிரம் = பட்டை தீற்றாமல் வேகடம் செய்த வயிரம்

பளிங்கு = படிகம்

பள்ளி = முனிவர் உறையிடம், கல்விச்சாலை

பறளை = பொட்டு

பறைக்குளக்குமி = பறையர் பகுதியில் உள்ள குளம் குட்டை

பறைச்சுடுகாடு = பறையர் பிணமெரிக்கும் இடம்

பறைச்சேரிநத்தம் = பறையர் சேர்ந்து வாழும் குடியிருப்பு இடம்

பன்மையார் தெரு = பல துறையாளர் தெரு

பாசமாலை = ஒருவகைக் கழுத்தணி

பாசம் = கயிறு

பாசுபதமூர்த்திகள் = "பாசுபதம்" என்னும் கணையை அர்ச்சுனற்கு வழங்கிய சிவபெருமான்

பாடவியம் = கருவி வாத்தியம் இசைத்தல்

பாண்டி வேளம் = பாண்டிய நாட்டு வேளத்தார்

பாதவக்காணி = கோயிலார் கொடுக்கும் உரிமை நிலம்

பாதாதி கேஸாந்தம் = அடி முதல் முடிவரை

பிங்காளம் = தாம்பாள வகையில் ஒன்று

பிஞ்சு = அரும்பு போன்ற சிறுகாய்

பிடிச்சருளிந = பிடித்துள்ள

பிதா = (சண்டீசரின்) தந்தை

பிரபை = ஒளி வட்டம் அல்லது திருவாசி

பிரஸாதம் பெறுகின்றார் = அனுக்கிரகம் பெறுகிறவர்

பிருஷ்ட கண்டிகை = பின்னலங்காரத்திற்குரியது. இடையையும் இரு குண்டிகளையும் பிரித்துக் காட்டி அலங்காரம் செய்வது

பிள்ளையார் = சிவன் மகனார், என்றும் குழந்தையாகவே உள்ளவர்

பீடம் = ஆசனம்

புச்சாதி சிகாந்தம் = வால் முதல் பிடரிவரை

புச்சாதிபணாந்தம் = வால்முதல் படம்வரை

புறமண்டலம் = சோழமண்டலம் அல்லாத-பாண்டிய சேர மண்டலங்கள் போன்ற-பிற மாநிலங்கள்

புறவூர் = பக்கத்து ஊர்

புஷ்யராகம் = வயிரத்தைப் போன்ற புஷ்யராக இரத்தினம்

பூண்ட = உடைய

பூமிசம்பத்து = நில உடைமை

பெண்டுகள் = மனைவிகள்

பெரிய மத்தளம் வாசிக்கின்றவன்

பெருந்தரம் = மேனிலை உத்தியோகம்

பெருவளவாய் = பெரிய அளவில் நீர் பாயும் வாய்க்கால்

பேக் கல்லில் வெட்டி = கூடிப் பேரி முடிவு கட்டினபடி கல்லில் எழுதி

பேசி = பூ

பேரப்பன் = பெரிய தந்தை

பேரால் = இனம் ஒன்றுக்கு

பொக்கணம் = சோழியப்பை

பொத்தி = ஒருவகை ரத்தினம்

பொலிசையூட்டு = வட்டி வருமானம்

பொன்னின் கொடி = பொன்னாற் செய்த துவஜம்

போனார் = சென்றவர்

மஞ்சாடி = மஞ்சாடி மறத்து விதை சுமார், அரை வீசம் வராகனெடை

மடல் = விபூதி மடல்

மடவிளாகம் = கோவிலைச் சுற்றி உள்ள வீதி

மண்டை = மண்டை ஓடு போன்ற உருவமுள்ள பா தமில்லாக் கண்ணம்

(கொட்டாங்கச்சி போன்றது)

மரகதம் = பச்சை

மரகதம் = பச்சை நிறமுள்ள இரத்தினம்

மரக்கால் = எட்டு படி கொண்ட பெய்தல் அல்லது முகத்தல் அளவு கலன்

மரத்தின் மேற்பாகம் பொன் போர்த்தது = மரக்கட்டையின் மேற் பக்கம் மட்டும் தங்கத்

தகடு வேய்ந்தது

மரத்தின்மேல்பொன் போர்த்தது = மரக்கட்டையின் மேல் முழுதும் தங்கத் தகடு

வேய்ந்தது

மஹாசாகை = பெருங்கிளை, அதாவது அடி மரத்திலிருந்து பிரியும் பனை

மஹாதேவர் = பெருந்தெய்வம், சிவபெருமான்

மஹாவிஷ்ணு = திருமால்

மா = இருபதில் ஒரு கூறு

மாங்காய் நாண் = மாங்காய் போன்ற உருக்கள் கோத்த சரடு

மாட்டில் = செல்வத்தில்

மாணி = மணமாகாதவன்

மாணிக்க நாளம் = தொளைச் சிவப்பு

மாணிக்கத்தின் தாலி = கெம்பு மணி பதித்த தொங்கும் நாண்

மாணிக்கம் = சிவப்பு, கெம்பு

மாண்ட = மாணி, பிரமசாரி

மாநவட்டில் = புனுகு அல்லது கஸ்தூரிக் எண்ணம்

மாம்பழமாகச் செய்த தகடு = மாம்பழம் போல செய்த தகடு

முத்திரைச் சங்கு = ஏதோ ஒரு வகைச் சங்க வாத்தியம்

முத்தின் உழுத்து = முத்தாலான அணி

முத்து வட்டம் = உருள் வடிவுள்ள பெரு முத்து

முழத்தால் அளந்து = முழக் கோலால் நீட்டியளந்து

முழம் = இருசாண், முழங்கால்

முறை நிபுணத்துவம்

மூக்கு வட்டகை = மூக்குடன் கூடிய வட்டப் பாத்திரம்

மூசலகன் = முயலகன் (ஆணவத்தின் சின்னம்)

மூலரத்ந பண்டாரத்தார் = முதலாக உள்ள இரத்தினங்களைப் பேணிக்காக்கும் பொக்கிஷத்தார்

மூழல் = மூடி

மொட்டு = பிஞ்சு, அரும்பு

மோதிரம் = விரலணி போன்ற வளையங்கள்

ரத்ந மோதிரம் = சிவப்பு மோதிரம்

ரத்நகடகம் = பலவகை இரத்தினங்கள் பதித்த கையணி

ரத்நங்கள் = சிவப்பு வயிரம் முதலான நவரத்தினங்கள்

ரத்நத்தய்யான் = கல்பதித்து நகை செய்யும் தட்டான்

ரத்நநியாசம் = இரத்தினக்கல் பதித்தல்

ரத்நவளை = சிவப்பு கல் பதித்த வளையல்

ராஜகேஸரி = அரசகேசரி என்னும் பெயருடைய பெய்தல் அளவை

ராஜாவர்த்தம் = அரச இரத்தினம்

ரிஷிகள் = முனிவர்கள்

லசுநி = இலைசுனி

வங்கியம் = குழல் (மேளம்) புல்லாங்குழல் போன்ற துளைக் கருவிகளின் பொதுப் பெயர்

வடுகக் காவலர் = வைராவி, அதாவது உயிரைக் கொடுத்துக் காவல் புரிவோர்

வண்ணத்தார் = கோயிலில் சுண்ணாம்பு, காவி, மஞ்சற்காவி அடிப்பவர்கள்

வண்ணாரசேரி = வண்ணார் சேர்ந்து வாழிடம்

வண்ணிகைத் திருக்கொற்றக் குடை = பல நிறங்களுடன் கூடிய நல்ல வெற்றிக் குடை

வயிர உழுத்து = வயிர்த்தாலான அணி

வயிரம் = வச்சிர ரத்தினம்

வரை = ஒரு வகைக் கல்

வர்க்கத்தார் = மரபினிர், சந்ததியார்

வலங்கை வேளைக்காரர் = காலந்தவறாது பணியாற்றும் வீர மைந்தர்

வலத்திருவடி நிலை = வலது பாதக்குறடு

வளையில் = வளையல்

விண்ணப்பஞ் செய்ய = ஓத

விமாநம் = கோவிலின் கோட்ப்புறச் சுவர்

வியாபாரி = வாணிகன்

விர்லே = விரல் அளவும் (விரல் முழத்தின் 1/16 கூறு)

விழுந்து கிடந்தார் = கால் வெட்டுண்டு நிற்க மாட்டாமையால் விழுந்து கிடந்தவர்

வீர்பட்டம் = வீரர்க்குரிய நெற்றிப் பட்டம்

வெட்டிந = எழுத்துப் பொறித்த

வெள்ளான் சுடுகாடு = உழவர் பிணமெரிக்குமிடம்

வெள்ளான் வகை = பயிர் செய்யும் முறை

வேங்கை நாடு = கோதாவரி கிருஷ்ணா மாவட்டங்கள் அடங்கிய நாடு

வேலி = சுமார் 6 3/4 ஏக்கர் அளவுள்ள நிலம்

வேளம் = காவலிடம், நம்பிகைக்குரிய காவற் பணி

வைடூர்யம் = பூனைக் கண் போல உள்ள இரத்தினம்

ஜகதிப் படை = புதை படைக் கற்களின் மேல் எழுப்பபெறும் கல்வரியில், நிலமட்டத்தில் காணும் நன்கு பொளித்த கல்வரிசை

ஸத்யாச்ரயன் = மேலைச்சாளுக்ய நாட்டிலிருந்த மன்னன் இரண்டாம் தைலபன் மகன்

ஸுப்பிரமண்ய தேவர் = சுப்பிரமணியக் கடவுள்

ஸ்தூபித்தறி = வியாளத்தின் உச்சியில் ஸ்தூபியை நிறுவ நடும் தூண் போன்ற நடுக்கால்

ஸ்ரீகார்யம் = திருக்கோயில் நிர்வாகத் தலைமை

ஸ்ரீகோயில் = தேவாலயங்கள்

ஸ்ரீசந்தம் = அணிவகையுள் ஒன்று

ஸ்ரீபண்டாரம் = கோயிற் கருவூலம்

ஸ்ரீபலி எழுந்தருளும் = திருப்பலி கொள்ளும் காலத்து புறப்படுகிற

ஸ்ரீபலித்தாலம் = தேங்காய், பழம் முதலிய பலிப்பொருள் வைக்கும் தாம்பாளம்

ஸ்ரீபாத புஷ்பம் = திருவடியில் மலர்போல அர்ப்பணிப்பது

ஸ்ரீபாதபீடம் = திருவடி ஆசனம், திருவடிதாங்கி

ஸ்ரீபாதம் = திருவடி

ஸ்ரீபாஹுவலயம் = வாகுவலயம் என்னும் தோளணி

ஸ்ரீமுடி = திருமுடி, கிரீடம்

ஸ்ரீவாஸுதேவர் = திருமால், சிறப்பாக கண்ணன்

ஸ்ரீஹஸ்தம் = திருக்கை

ஹளஹளம் = ஏதோ ஒரு இரத்தினக் கல்